# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழி வளம்

வயல் : 1 விளைச்சல் : 2 திருவள்ளுவர் ஆண்டு 2051 சூலைத் திங்கள் - 2020



- தூயதமிழ் பேசினால் இலவயம்!
- தில்லியைக் குணமாக்கும் தமிழ் மருத்துவம்!
- தூயதமிழ் இளைஞர்கள்!
- அகரமுதலியின் அமைதிப்புரட்சி!
- தொற்றுக்காலக் கலைச்சொற்கள் !
- தூயதமிழில் பேசுவோருக்குப் பரிசு!

# தொற்றுக்காலக் கலைச்சொற்கள்

1. Herd immunity - குழும நோய்த்தடுப்பாற்றல்
2. Disinformation - புரளி/தவறான தரவல்
3. Confirmed case - நோய்த்தாக்கம் உறுதியானவர்
4. Physical distancing - விலகியிருத்தல்
5. Infection precautions - தொற்றுத்தாக்குக் காப்பு
6. Moratorium - குறுங்காலப்பணி முடக்கம்
7. Exponential growth - பல்கிப்பெருகுதல்/ பேரளவுப் பெருகுதல்
8. Local Transmission - அண்மையிடப் பரவல்
9. E-Pass - மின் இசைவுச்சீட்டு
10. Communicable disease - தொற்றுநோய்
11. Cordon sanitaire - தொற்றுப்பகுதித் தடை எல்லை
12. Rapid test - விரைவு ஆய்வு
13. Germicide - நுண்ணுயிரிக்கொல்லி
14. plasma therapy - ஊனீர் மருத்துவம்
15. mortality - இறப்பு
16. Ventilator - மூச்சுச் சீராக்கி
17 Respirator - மூச்சுப்பொறி
18. Community spread - குமுகப்பரவல்
19. Airbarne - காற்றுவழிப்பரவல்
20. Outspread - கடும்பரவல்
21. Incubation period - நோய் அரும்பு காலம்
22. Oxygen mask - உயிர்வளி முகக்கவரி
23. Surgical Mask - அறுவை மருத்துவ முகக்கவரி
24. Mitigation - துயர் தணிப்பு
25. Antimicrobial - நுண்ணுயிரி எதிர்ப்பு


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்.ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2051 - சார்வரி வைகாசி
சூலை 2020

ஆசிரியர் : தங்க. காமராசு
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திருமதி. ஜெ. சாந்தி
திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.78, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : dir.dtedp@tn.gov.in
வலைத்தளம் : www.sorkuvai.com


உலகத் தமிழர்களின் படைப்புகள், செய்தித் துணுக்குகள், நிகழ்வுகளின் ஒளிப்படங்கள் ஆகியவை வரவேற்கப்படுகின்றன



## ஆசிரியர் பேசுகிறார்

# அகரமுதலியின் அமைதிப் புரட்சி

அன்பானவர்களே!

நாம் பெருந்தொற்றில் இருந்து விடுதலை பெற்று விரைவில் இயல்பு நிலைக்குத் திரும்புவோம் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. தொற்றுப் பரவலைத் தடுக்க ஊரடங்கு தொடரும் வேளையிலும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் தனது வாலாயமான இயக்ககப் பணிகளைச் சுணக்கமில்லாமல் செய்து வருவதை ஊடகங்கள் வழியாக மக்கள் அறிவார்கள். அடுக்கடுக்கான ஆக்கப்பணிகளால் இவ்வியக்ககமும் புதுப்பொலிவு பெற்று வருகிறது

கடந்த 07.06.2020ஆம் நாள் காணொலி அமர்வில் பத்து மாவட்ட இளைஞர்கள் தூயதமிழ் பேசுவதில் இளையோர் எதிர்கொள்ளும் சிக்கல்களை எடுத்துரைத்து அவற்றிற்கான தீர்வுகளையும் பதிவு செய்தார்கள். அதனைத் தொடர்ந்து 28.06.2020ஆம் நாள் மேலும் 10 மாவட்ட இளைஞர்கள் அதே தலைப்பில் கருத்துரை வழங்கி உலகத் தமிழர்களின் கவனம் ஈர்த்தார்கள். 38 மாவட்டங்களைச் சார்ந்த 30 வயதிற்குட்பட்ட இளைஞர்களை ஒன்றிணைத்து நடத்தப்படுகின்ற இந்த நிகழ்வு ஓர் அமைதியான மொழிப்புரட்சியைச் செய்துவருவதாகப் பொது நோக்கர்கள் பாராட்டுகிறார்கள்

கடந்த 21.06.2020ஆம் நாள் அகரமுதலி இயக்ககம் சென்னை இலயோலா கல்லூரியுடன் இணைந்து "தமிழர் வாழ்வும் வட்டார வழக்குச் சொற்களும்" என்கிற தலைப்பில் நேரலையாக இணையவழிப் பன்னாட்டு உரை அரங்கத்தினை நடத்தியது. அதில் முத்தான மூன்று ஆய்வறிஞர்கள் பயனுள்ள உரையை நிகழ்த்தினார்கள்.

இயக்ககம் நடத்தும் இப்படிப்பட்ட காணொலி நிகழ்வுகளின் வழியாக உலகத் தமிழர்களால் இவ்வியக்ககம் உற்று நோக்கப்படுவதைப் புரிந்து கொள்ள முடிகிறது. அதனால் எந்நேரமும் இவ்வியக்ககம் விழிப்பாகவும் விரைவாகவும் செயல்பட்டு வருகிறது.

இயக்ககத்தின் தொகுப்பாளர்கள், பதிப்பாசிரியர்கள் ஒவ்வொருவரும் நாளொன்றுக்கு 30 கலைச்சொற்களை வடிவமைத்து வருகிறார்கள். இவ்வாண்டு தமிழ் அகராதியியல் ஆய்வு மலருக்காகத் தமிழறிஞர்களிடம் இருந்து ஆய்வுக்கட்டுரைகளைக் கேட்டு செய்தித்தாள்கள், வலைத்தளம், புலனம் வழியாகச் செய்தி அறிக்கை அனுப்பப்பட்டுள்ளது. நடைமுறை வாழ்க்கையில் தூய தமிழில் பேசுவோரைக் கண்டறிந்து பரிசு வழங்குவதற்கான பணியையும் இவ்வியக்ககம் தொடங்கியிருக்கின்றது.

8050 பக்கங்கள், ஏழு மடலங்கள் என வரையறுக்கப் பட்டு வெளிவரவிருக்கும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலியின் திருந்திய பதிப்பு அச்சுக்குப் போகின்ற நிலையில் அணியமாக்கப்பட்டிருக்கின்றது. இதைத்தவிர மாணவர் இலக்கிய அகராதி, அயற்சொல் அகராதி, நடைமுறைத் தமிழ் அகராதி என மூன்று அகராதிகளைத் தொகுக்கும் பணிகள் நிறைவுற்று அச்சுக்கு அணியமாக்கப்பட்டுள்ளன. மேலும் மூன்று அகராதிகளைத் தொகுக்கும் பணிகள் விரைவாக நடைபெற்று வருகின்றன.

மேற்கண்ட அகராதிகளை வெளியிடுவதன்வழி இவ்வியக்ககம் தலைமுறைத் தமிழர்களிடையே ஒரு வழிகாட்டியாகத் தன்னை நிலைநிறுத்திக் கொள்ளும். தமிழ் மொழி என்றால் அதற்கு ஆணிவேர் அகரமுதலிகள்தாம் என்பதை மீண்டும் ஒருமுறை இவ்வியக்ககம் உறுதிப்படுத்தும்.

இவ்வாண்டு தமிழ்நாடு சட்டமன்ற அறிவிப்புகளாகப் பத்துத் திட்டங்கள் அறிவிக்கப்பட்டுள்ள நிலையில் அவற்றுக்கான அரசாணைகளை எதிர்நோக்கி இருக்கிறோம். "தமிழுக்குத் தொண்டு செய்வோன் களைப்பதில்லை" என்ற புதுமொழியோடு தமிழ்ப்பணியாற்ற உலகத் தமிழர்களாகிய நீங்களும் எங்களோடு இணைந்து செயலாற்ற விரும்புகின்றோம். சொற்குவை.காம் (sorkuvai.com) இணைய தளத்திற்குள் வந்துபாருங்கள். அது நீங்கள் அன்றாடம் புழங்கும் இல்லமாகத் தெரியும் நாங்கள் உங்கள் உறவினர்களாகத் தெரிவோம்.

நன்றி.

மீண்டும் சந்திப்போம்.



# அறிய வேண்டிய அரிய செய்தி - 2

# முளைப்பாரித் தொழில் நுட்பம்

உழவர்கள் பருவம் பார்த்து வேளாண்மை செய்து அறுவடை செய்யும் நேரத்தில் முதலில் அடுத்த போகத்திற்கான தரமான விதைகளைத் தங்களுடைய நிலத்திலேயே தேர்வு செய்ய காலங்காலமாகக் கடைப்பிடித்த தொழில்நுட்பம்தான் முளைப்பாரி.

தமிழர்கள் விதைகளைத் தேர்வு செய்வதிலேயே பல நுட்பங்களைக் கடைப்பிடித்தனர். நோய்த்தாக்குதல் இல்லாத தரமான பயிர்களிலிருந்து நன்றாக விளைந்த விதைகளைத் தேர்வு செய்வர். அவ்வாறு தேர்வு செய்த நெல் விதைகளைக் குதிர்களிலும் கோட்டைகட்டியும் பூச்சித் தாக்குதலில் இருந்து காப்பாற்ற அவற்றுடன் வேம்பு, மஞ்சள், நொச்சி, வசம்பு மற்றும் பல மூலிகைகள் சேர்த்துப் பாதுகாப்பர். அடுத்த பருவத்தில் விதைப்பதற்கு முன் விதைகளின் முளைப்புத் திறனை ஆராய்ந்த பிறகே விதைப்பது தமிழர்களின் நெடுங்கால வழக்கமாக இருந்திருக்கிறது. அப்படி நம் முன்னோர்கள் குழுவாகச் சேர்ந்து கூட்டு முயற்சியாகச் செய்ததுதான் முளைப்பாரித் திருவிழா என்ற பெயரால் வழங்கப்பட்டது.

**முளைப்பாரித் திருவிழா**

பெரும்பாலும் மாசி, பங்குனி, சித்திரை, ஆடி மாதங்களில் சிற்றூர்களில் உள்ள நாட்டுப்புறப் பெண் தெய்வங்களுக்கு முளைப்பாரி இட்டு, பொங்கல் வைத்துக் கொண்டாடப்படும். பெண்கள் வளமையின் குறியீடாகத் திகழ்வதால் முளைப்பாரியின் தேர்வு முதல் பாதுகாப்பு வரை அனைத்தும் பெண்களிடமே ஒப்படைக்கப்படுகிறது. வளர்பிறைக் காலங்களில் மட்பானை, பனைமூங்கில் கூடைகளில் ஆறு அல்லது குளத்திலிருந்து வண்டல் மண் எடுத்து வந்து முளைப்பாரி சட்டி உருவாக்கப்படும். பின் முளைகட்டிய விதைகளை மண்கலவை நிரம்பிய தொட்டியில் விதைப்பார்கள். கதிரவன் ஒளி படாத இடத்தில் வைத்து, தண்ணீர் தெளித்துப் பாதுகாப்பார்கள். அந்நேரங்களில் அயலார் யாரையும் வீட்டிற்குள் சேர்ப்பதில்லை. மேலும் பெண்கள் மாதவிடாய்க் காலங்களில் முளைப்பாரியின் அருகில் செல்ல அனுமதிப்பதில்லை. காரணம் அந்த நேரங்களில் அவர்களின் உடம்பிலிருந்து அதிகப்படியான வெப்பம், கழிவுகள் வெளியேறுவதால் அது பச்சிளம் குழந்தை போல் உள்ள முளைப்பாரியின் வளர்ச்சியைப் பாதிக்கும் என்று நினைத்திருக்கிறார்கள். காலப்போக்கில் அது பெண்களை இழிவுபடுத்தும் தீட்டு என்று திசைமாறிவிட்டது. முளைப்பாரி போட்ட மறுநாளிலிருந்து பெண்கள் வீட்டின் முன்பு வட்டமாக நின்று கும்மி அடிப்பார்கள்

"முளைப்பாரி போடுங்கம்மா முத்தாரம்மனைப் பாடுங்கம்மா
கரங்கொட்டி ஆடுங்கம்மா கருமாரியைப் பாடுங்கம்மா
வெயில்படாத கோட்டை கட்டி விதைச்சு வச்சோம் முளைப்பாரி
விதவிதமா விதை பரப்பி வெக்காளிக்கு முளைப்பாரி
முளைப்பாரி எடுக்கையிலே முத்துமாரி மனங்குளிர்வாள்"

இந்தக் கும்மி ஓசை எழுவது போல முளைப்பாரியும் முளைத்து வெளிவரும் என்பது நம்பிக்கை. இவ்வாறு பாதுகாத்த முளைப்பாரியை ஒன்பதாம் நாளில் ஊர்ப் பொது இடத்தில் வைப்பார்கள். யாருடைய விதையின் முளைப்பாரி வீரியமாக வளர்ந்துள்ளதோ அவருடைய முளைப்பாரியைச் சுட்டிக்காட்டி அவ்விதையே அனைவருக்கும் சிறந்த விதையாகக் கருதப்படும். பின்பு பத்தாம் நாளில் ஓடும் நீரில் முளைப்பாரியைக் கரைத்து, பயிர் போகும் இடமெல்லாம் செழிப்பதற்குப் பாட்டுடன் வாழ்த்தி வழியனுப்பித் திருவிழாவை நிறைவு செய்வர்.

இப்படி வழிபாட்டுத் திருவிழாவில் மட்டுமல்லாது முளைப்பாரியின் இன்றியமையாமையை அனைவரும் அறிந்திருக்க வேண்டும் என்பதற்காகத் திருமணம் உள்ளிட்ட முக்கிய நிகழ்வுகளிலும் முளைப்பாரியைத் தவறாமல் இடம்பெறச் செய்திருக்கிறார்கள் நம் முன்னோர்கள். சிலப்பதிகாரத்தில் கோவலன் கண்ணகி திருமணத்தின்போது தவச முளைப்பாரி கொண்ட குடங்களைப் பெண்கள் ஏந்தி வந்த காட்சியை,

"விரித்த பாலிகை முளைக்குட நிறையினர்" என்று சுட்டுகிறார் இளங்கோவடிகள்.

"வெண்டாமரை முளைப்பாலிகை" (வெங்கைக் கோவை 97) என்று வெங்கைக்கோவையும் முளைப் பாலிகை பற்றி குறிப்பிட்டுள்ளது. திருமணம் போன்ற மங்கல நிகழ்வுகளில் மட்டுமல்லாது வீட்டில் யாராவது இறந்தபின் ஒன்பான் தவசங்களை விதைத்து அது வளரும் செழிப்பைப் பொருத்து அந்தக் குடும்பத்தின் நன்மை தீமைகளைக் கணிக்கவும் முளைப்பாரி வளர்க்கப்பட்டதை அறியமுடிகிறது. இது இறப்பு நிகழ்ந்த வீட்டாரின் துயரை மடைமாற்றம் செய்யும் உளவியல் சார்ந்த பண்பாடு என்பதும் கவனிக்கத்தக்கது. இப்படி விதை நேர்த்தியின் முதன்மை அங்கமாக இருந்த முளைப்பாரித் திருவிழாவைப் பெரும்பாலும் இன்று நடத்துவதில்லை. இதனால் நம் மண்சார்ந்த மரபார்ந்த பல ஆயிரம் வீரியமிக்க விதைகளை இழந்துவிட்டோம். மரபணுமாற்ற அல்லது மானிய விதை என்று வீரியமில்லாச் சொத்தை விதைகளை வாங்கி விதைத் திணிப்பை ஏற்றுக் கொண்டதன் விளைவே இன்றைய வேளாண்மையின் வீழ்ச்சி.

– ஏ. காந்தி, உதவிப் பதிப்பாசிரியர்
அகரமுதலி இயக்ககம்

# தூயதமிழ் இளைஞர்கள்

## தூயதமிழ் பேசுவதில் இளைஞர்கள் எதிர்கொள்ளும் சிக்கல்களும்! தீர்வுகளும்!

**கோ**வை தூயதமிழ் இளைஞர் பாசறை மற்றும் தமிழ்நாடு அரசு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் இணைந்து நடத்திய, "தூயதமிழ் பேசுவதில் இளைஞர்கள் எதிர்கொள்ளும் சிக்கல்களும்! தீர்வுகளும்!" என்ற தலைப்பிலான "இணையவழி இளையோர் கருத்துரை அமர்வு" 07/06/2020 அன்று சிறப்பாக நடைபெற்றது. அமர்வில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் திரு.தங்க.காமராசு அவர்கள் தூயதமிழ் பேசுவதில் உள்ள சிறப்பு, இன்றியமையாமை மற்றும் அகரமுதலித் திட்டத்தின் செயல்பாடுகள் குறித்துச் செறிவாக எடுத்துரைத்து நிகழ்வில் தலைமை தாங்கினார். முன்னதாக, தூயதமிழ்ப் பற்றாளர் பரிசுபெற்ற திரு.சி.மணிகண்டன் வரவேற்புரை நவின்று, நிகழ்ச்சியைத் தொகுத்தும் வழங்கினார். தமிழகத்தின் பல மாவட்டங்களிலிருந்தும் கலந்து கொண்ட தூயதமிழ் இளைஞர்களான பத்துக் கருத்துரையாளர்களும் "தூயதமிழ் பேசுவதில் இளையோர் காணும் சிக்கல்களும் தீர்வுகளும்" எனும் பொருண்மையில் தங்கள் கருத்தினைத் தெளிவாகவும் பிறமொழிக் கலப்பு இல்லாமலும் வெளிப்படுத்தினார்கள். நிறைவாக, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் தொகுப்பாளர் திருமதி. ஜெ.சாந்தி நன்றி கூறினார். இந்த அமர்வில் நற்றமிழ் செ.வ.இராமாநுசம், இலண்டன் தமிழ்மொழிக் கலைக்கழகம் சிவாப்பிள்ளை, துபாய் செந்தமிழர் பாசறை பாலாஜி, அபுதாபி தமிழ் மக்கள் மன்றம் பாஸ்கர் உள்ளிட்ட பன்னாட்டுத் தமிழறிஞர்கள் கலந்து கொண்டு வாழ்த்துரை வழங்கினர். அமர்வில் நூற்றுக்கும் மேற்பட்ட தமிழ் ஆர்வலர்கள் கலந்து கொண்டனர்.



**சி. மணிகண்டன்**
**கோவை**

### அமர்வாளர்களின் கருத்துரைகள்



"புதிய தொழில்நுட்பச் சொற்களுக்குப் பிறமொழியையே பயன்படுத்துகிறோம். ஒவ்வொரு துறையிலும் அந்த மாணவர்களின் புலத்திற்கேற்பக் கலைச்சொற்களை ஒரு தாளாக வைத்து மதிப்பெண் தந்தால், மதிப்பெண்ணிற்காக அனைவரும் தூயதமிழையும் கலைச்சொல்லாக்கம் பற்றியும் அறிவர். ஊடகத்தின் வாயிலாக இளையோரிடம் தூய தமிழைச் சேர்க்கலாம். இதை அரசு ஊக்குவிக்கலாம்."

**த. ஆரோக்கிய ஆலிவர் ராசா, மதுரை**



நாளுக்கு நாள் உலகில் புதிய புதிய துறைகளும் அத்துறைகளில் புதிய புதிய சொற்களும் பிறப்பெடுக்கின்றன. அவற்றைத் தமிழ்ப்படுத்தித் தமிழ்படிக்கும் மாணவர்களிடமும் மக்களிடமும் சேர்க்க வேண்டும். வட்டார வழக்குச் சொற்களுக்கெனத் தனி அகரமுதலியை உருவாக்கி அதை நூலாக மட்டுமின்றி மின்னாக்கம் செய்து இணையத்திலும் பதிவிட வேண்டும். அயற்சொல் அகரமுதலி ஒன்றை உருவாக்கி மின்னாக்கம் செய்ய வேண்டும். அதனால் அனைவரும் தாங்கள் பயன்படுத்தும் சொற்கள் தமிழா ? பிறமொழியா ? என அடையாளம் காண இயலும். மக்கள் அதிகம் பயன்படுத்தும் மிகப்பெரிய துறையான மென்பொருள் துறையில் தமிழில் நிரல் எழுதும் மென்பொருளார்களை ஊக்குவிக்க வேண்டும்.

**க.முத்துவிக்னேஷ், விருதுநகர்**



தற்போதைய காலத்தில் சொற்களுக்குச் சரியான, தெளிவான மொழிபெயர்ப்பு இல்லாமையும், ஒரு சொல்லைக் குறிக்கப் பல சொற்கள் உருவாக்கப்படுவதும் தூயதமிழ் பேசுவதற்குச் சிக்கலாகவே இருக்கிறது. சான்று புலனம்/கட்செவி. இரண்டாவதாக, உச்சரிப்புகளில் சிக்கல். சான்று மிதிவண்டி/ஈருருளி. ஈருருளி என உச்சரிப்பதில் சிக்கல். ஆசிரியர்கள் மற்ற பாடங்களுக்கு முக்கியத்துவம் வழங்குவதும், தமிழ் தானே என்ற மற்ற பாட ஆசிரியர்களின் சாடலும் மாணவர்கள் தமிழ் மீது கொண்டிருக்கும் நேர்மறை எண்ணத்தைக்கூட எதிர்மறையாக்குகின்றன. படித்தவர்கள் முதல் படிக்காதவர்கள் வரை அனைவரும் அயல்மொழியின் மீது கொண்டுள்ள ஆர்வத்தை அவர்களின் பிள்ளைகளுக்கு வைத்திருக்கும் பெயர்களிலே நம்மால் காணமுடிகிறது. தமிழ், ஆங்கிலச் சொற்களின் வேறுபாட்டை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால், தமிழ் மற்றும் வடமொழியின் வேறுபாட்டைப் புரிந்துகொள்ள முடியாத அளவிற்கு இருமொழியினுடைய கலப்பு அதிகமாக இருக்கிறது. எந்த மொழியையும் கலந்து பேசுவது சரியான பேச்சு மொழியாக இருக்க முடியாது என்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும். அடுத்து, நாம் பேசும் தமிழ் சரியானதா ? இல்லையா ? என்ற தாழ்வுமனப்பான்மையை விலக்கி, பல கேளிகள், கிண்டல்கள் ஏற்பட்டாலும் அவற்றைப் பொருட்படுத்தாமல் தூயதமிழில் பேச வேண்டும்.

**ம. நாகராஜ், கிருஷ்ணகிரி**



தமிழர்கள் தனித்தமிழ்ச்சொற்களை அறியாமல் பிறமொழிச் சொற்களைத் தமிழ்ச்சொற்கள் என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள் இது ஒரு சிக்கல். இன்றைய படைப்பாளுமை மிக்க இளைஞர் களிடையே படைப்புகளில் மொழி அவசியமன்று, கருத்துகளும், உணர்வுகளுமே முக்கியத்துவம் பெறுகின்றன எனவே படைப்பிற்கு மொழி ஒரு தடையில்லை என்கிற எண்ணம் அதிகமாயிருக்கிறது. இது இரண்டாவது சிக்கல்

இவற்றைக் களைய, பாடநூல்களில் குறிப்பாகத் தமிழ்ப்பாட நூல்களையாவது தனித்தமிழில் வடிவமைப்புச் செய்ய முயலுதல் வேண்டும். இளைஞர்கள் தனித்தமிழில் படைப்புகளை இயற்றுகிறபோது அவற்றை அரசோ, அரசு அனுமதி பெற்ற தமிழ் அமைப்புகளோ தாமே முன்வந்து பதிப்பிக்க வேண்டும்.

வீட்டில் குழந்தைகளுக்குத் தமிழில் பெயர் வைக்கலாம். பெயர்களைத் தமிழ்ப்படுத்தலாம். நம் குடியிருப்புப் பகுதிகளில் உள்ள அங்காடிகள், விடுதிகளுக்குத் தமிழ்ப்பெயர் பதாகைகளை நாமே வடிவமைத்து வழங்கலாம். சாலைகளின் பெயர்களைத் தமிழ்ப்படுத்திப் பதாகைகளை அமைக்கலாம். கையடக்க அயற்சொற் அகராதிகளைப் பதிப்பித்து மாணவர்களுக்கும் இளைஞர்களுக்கும் நூலகங்களுக்கும் விலையின்றி வழங்கலாம். மாணவர்கள் தமிழ் மொழியினைப் பயன்படுத்து வதற்காகப் போட்டிகள் வைத்து, அரசு வழங்கும் பெருந்தொகையைச் சிறுசிறு பகுதியாக மாணவர்களுக்கு உதவித் தொகையைப் போல வழங்கலாம்.

மூன்று மாதங்களுக்கு ஒருமுறை தனித்தமிழ்த் தேர்வுகளை எழுத்து, பேச்சுத்தேர்வுகளாக வைத்து அவற்றில் வெற்றி பெறுகிற மாணவர்களுக்குத் தொடர்ந்து வழங்கவும், மற்றவர்களுக்கு இடைநிறுத்தியும் வழங்குகிறபோது ஒவ்வொரு முறையும் அத்தொகையை வாங்கிவிட வேண்டுமென்கிற அவாவில் எண்ணற்ற மாணவர்களும் தனித்தமிழில் பேச, எழுத பயிற்சி மேற்கொள்ள வாய்ப்பிருக்கிறது.

அரசு அலுவலகங்களில், பத்திரப்பதிவுத் துறையில் அதிகமான பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்துகிறோம். அவற்றில் தனித்தமிழில் ஆவணங்களை உருவாக்கும் பொருட்டு, அலுவலர்களுக்கு அயற்சொல் அகராதிகள் மற்றும் தனித்தமிழில் எழுத பயிற்சிகள் வழங்கவேண்டும்.

**க. கருப்பசாமி, தென்காசி**



தூயதமிழ் பேசுவதில் இன்றைய இளையோா் காணும் சிக்கல்களில் முதன்மையாக இருப்பது மொழியறிவு இல்லாமை தான். இன்றிருக்கும் கல்வியின் கற்றல் – கற்பித்தல் முறையானது மொழியறிவினை வெறும் பாடமாகவேதான் மாணவர்களைச் சென்றடைகிறது.

பள்ளிக்கூடங்களில் ஆசிரியர்களால் கற்பிக்கப்படும் மொழியறிவானது எப்போது மொழியுணர்வாக மாற்றப்படுகிறதோ, அப்போதே மாணவர்கள் மொழி ஆய்வுக்கு உட்படுவார்கள். தூயதமிழ்ச் சொற்களுக்குண்டான விழிப்புணர்வு பள்ளிப்பருவத்திலேயே ஏற்படுத்தப்படுமாயின் அவர்களுடய வாழ்க்கை கலப்புமொழியற்ற தூயதமிழ்ச் சொற்களாலேயே நிறையப்பெற்றிருக்கும்.

**ச.திவாகர், வாணியம்பாடி**



இன்றைய சூழலில் தொலைபேசி, அலைபேசி ஒலித்தால் பெரும்பாலானோர் உரையாடலை ஆங்கிலத்தில்தான் துவங்குகிறார்கள். தமிழ்ச் சொல்லை எப்படிப் பயன்படுத்த வேண்டும் என்கிற ஒரு வழிகாட்டுதல் இல்லாமல் தமிழ்ச் சமுதாயம் இருக்கின்றது. சான்றாக, சுடுதண்ணீா் என்ற சொல்லைக் காணலாம். தண்மை–குளிர்ச்சி. தண்மை+நீர்– தண்ணீா். அதாவது குளிர்ந்த நீரைத் தண்ணீா் என்கிறோம். வெம்மை–வெப்பம்(சூடு). ஆகவே சூடான நீரை வெந்நீர் என்கிறோம். இங்கே சுடுதண்ணீா் எப்படி வந்தது ?

தமிழ்ச்சொல்லை எப்படிப் பயன்படுத்த வேண்டும் என்ற முறையைப் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் கற்பிக்க வேண்டும்.

**க.அமர்நாத்,திருப்பூர்**

இன்றைய இளைஞர்களின் வாழ்வில் பெரும்பங்கு வகிப்பது திரைப்படங்களும் அவற்றில் வரும் உரையாடல்களும் பாடல்களும்தான். அவை பெரும்பாலும் பிறமொழிக்கலந்தே வருகின்றன. காரணம் திரைப்பட இயக்குநர்களும், உரையாடல் எழுதுபவர்களும் பாடலாசிரியர்களும் அதிகம் மொழிக்கலப்பைப் பயன்படுத்துவதே. ஊடகங்களும் அவற்றின் செய்தியாளர்களும் மொழிக்கலப்புச் சொற்களையே பயன்படுத்துகின்றனர்.

கணினி உலகத்தில் புலனம், முகநூல், கீச்சகம் சமூக ஊடகங்களில் ஆங்கிலம் போன்ற பிற மொழிகளே முன்னிலை வகிக்கின்றன. இவற்றைப் பயன்படுத்தும் இளைஞர்களும் மொழிக்கலப்பிற்கு அடிமையாகி விடுகின்றார்கள். கல்விச்சாலைகளில் மாணவர்களுக்குத் தமிழ் மதிப்பெண் நோக்கிலே கற்பிக்கப்படுகிறது. கோவில், மளிகைக்கடை போன்ற பொது இடங்களில் தூய தமிழில் பேசினால் தம்மை இழிவாக எண்ணிவிடுவார்களோ என்ற அச்சம் பெரும்பாலான இளைஞர்களுக்கு இருக்கின்றது.



**மு.கௌதமன், கரூர்**



ஒரு குழந்தை தன் வாழ்வின் அதிக நேரத்தைப் பள்ளியில்தான் செலவிடுகிறது. ஆகவே அங்குக் கற்றல் கற்பித்தல் மற்றும் பேசுவது என அனைத்தும் ஆங்கிலத்தில் இருப்பதால் மாணவர்கள் தமிழ் பேசுவதில் பல சிக்கல்களை எதிர்கொள்கிறார்கள். பெரும்பாலான பெற்றோர்கள் தங்கள் குழந்தைகள் தமிழ் பேசுவதைத் தவிர்க்க வைத்து, பிறமொழியைப் பேசச் செய்து பெருமை கொள்கிறார்கள். இன்னும் சில பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்குத் தமிழில் பேச வராது ஆங்கிலம்தான் பேச வரும் என்று இறுமாப்புக் கொள்கிறார்கள். இப்படியெல்லாம் தடை செய்தால் எப்படி அக்குழந்தைகள் தமிழ் பேசுவார்கள் ?. தமிழாசிரியர் முயன்றால் மாணவர்களைத் தூய தமிழில் சரளமாகப் பேச வைக்க முடியும்.

**நே.பிரதியுக்தா, கோவை**



பள்ளிகளில் தமிழ் கட்டாய மொழியாக்கப்பட்டு, பிறமொழிக் கலப்பு இல்லாத தூயதமிழில் ஆசிரியர்களும், மாணவர்களும் பேசத் தொடங்கிவிட்டால் மாணவர்கள் மூலமாகப் பெற்றோர்களும் தூய தமிழில் பேசத் தொடங்குவார்கள்.

நாம் சமுதாயத்தில் தூயதமிழ் பேசும் போது,

"எப்படி இவ்வளவு அழகாகப் பேசுறீங்க!" என்கிற வியப்பையும்..

"இன்னுமா தமிழில் பேசிக்கிட்டு இருக்குறீங்க ?" என்கின்ற ஏளனச் சிரிப்பையும் எதிர்கொள்ள வேண்டியிருக்கிறது.

ஆங்கிலம் உயர்ந்த மொழி என்று சொல்லிச் சொல்லி இங்கு ஆங்கில வழிக் கல்விக்கூடங்கள் அதிகமாகிக் கொண்டே இருக்கின்றன. அங்குப் படிக்கின்ற தமிழ் மாணவர்களுக்கு ஆங்கிலமும் பேசத் தெரியவில்லை, தமிழும் பேசத் தெரியவில்லை என்பதுதான் மறுக்க முடியாத உண்மை.

நாள்தோறும் ஐந்து ஆங்கிலச் சொற்களைப் படிக்கச் சொல்கிற சான்றோர்கள், ஐந்து தூயதமிழ்ச் சொற்களையாவது கட்டாயமாக மாணவர்கள் கற்க வேண்டும் என்று வலியுறுத்தினால் இளைஞர்களுக்குத் தூய தமிழில் பேச வேண்டும் என்கின்ற ஆர்வம் அதிகமாகும்.

அந்நிய நிறுவனத்தில் வேலைசெய்யவேண்டுமென்றால் அந்நிய மொழி தெரியவேண்டும் என்கிற சூழலும், தமிழ் நம் தாய்மொழியாக இருந்தாலும் வாழ்க்கைக்குரிய மதிப்பையும் வாழ்வாதாரத்தையும் உயர்த்துவதற்கு அது உதவாது என்கிற போலி பிம்பமும் பெரும்பாலானோரிடம் இருக்கின்றது.

பிறமொழிகளில் தமிழ்கலந்து யாராவது பேசினால் அதைத் தவறு என்று சுட்டிக்காட்டும் நாம், நம் தமிழ் மொழியில் அப்பிழையைச் செய்கிறோம்.இது தமிழுக்கு நாம் செய்கிற மிகப்பெரிய துரோகம்.

"என்றைக்குத் தமிழ்ப்பேச்சு என்பது அவமானம் அல்ல அது நம் அடையாளம்" என்பதை இளைஞர்கள் புரிந்துகொள்கிறார்களோ அன்றைக்குத்தான் எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்கின்ற நிலை வரும்.

**– மு.பிரேமா, இராஜபாளையம்**



எனது தாய்மொழி தமிழ் அன்று தெலுங்கு ஆகும். எனவே வீட்டில் தெலுங்கு பேச வேண்டும். பள்ளியில் ஆங்கிலம் பேச வேண்டும் என்கிற சூழல். நான் மென்பொறியாளராகப் பணியாற்றும் நிறுவனம் பன்னாட்டு நிறுவனம் என்பதால் பெரும்பாலும் ஆங்கில உரையாடல் காணப்படும். இத்தகைய காரணத்தினால் என்னைச் சுற்றியுள்ள சமுதாயத்திற்கு ஏற்றவாறு மாறும் சூழ்நிலைக்குத் தள்ளப்பட்டேன். என்னைப் பொருத்தமட்டில் ஒருவரின் மாணவப் பருவத்திலேயே தூயதமிழுக்கான புரிதலும் நல்ல ஊக்குவிப்பும் அளிக்கப்படவேண்டும். இதற்கு ஆசிரியர்களும் முழு ஒத்துழைப்பு நல்க வேண்டும். ஆசிரியர்கள் கூறுவதைப் பின்பற்றுபவர்கள் அந்தப் பழக்கத்தைத் தங்களுடைய வாழ்நாள் முழுவதும் கடைப்பிடிப்பார்கள்.

**வெ.அரவிந்த், சூலூர்**







# தமிழர் வாழ்வும் வட்டார வழக்குச் சொற்களும்

## இணையவழிப் பன்னாட்டு உரை அரங்கம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் சென்னை இலயோலா கல்லூரித் தமிழ்த்துறை இணைந்து நடத்திய "தமிழர் வாழ்வும் வட்டார வழக்குச் சொற்களும்" என்னும் பொருண்மையிலான இணையவழிப் பன்னாட்டு உரை அரங்கம் 21.06.2020 ஞாயிற்றுக்கிழமை சிறப்பாக நடைபெற்றது.

இலயோலா கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் து.மேரி சொர்ணாம்பாள் வரவேற்புரை வழங்க, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் திரு.தங்க.காமராசு அவர்கள் தலைமை வகித்து, இயக்ககத்தின் செயற்பாடுகள் குறித்தும் மொழியின் வளர்ச்சிக்கு வட்டார வழக்குச் சொற்கள் எவ்வகையில் பயன்படுகின்றன என்பது குறித்தும் உரையாற்றினார்.

இவ்வுரை அரங்கில் கோவை சி.பி.எம். கல்லூரியின் மேனாள் தமிழ் இணைப் பேராசிரியர் முனைவர் மா.நடராசன் அவர்கள், "கொங்கு வட்டார மொழியின் பண்பாட்டுக் கூறுகள்" என்னும் பொருண்மையில் ஆற்றிய உரையில் அங்கம் பொறுக்கி ஆத்தில் விடுதல், தொட்டிக்கட்டு ஊடு (வீடு), உப்பு வாங்குதல், பட்டியாள் நேரம், பழைய சோத்து (சோற்று) நேரம், மத்தியானச் சோத்துக்குக் கையுடற நேரம், ங்கோ, ஈடுதேங்காய் போன்ற சொற்களின் பொருள் விளக்கங்களை இயல்பு நடையில் எடுத்துரைத்தார்.

| சொற்கள் | விளக்கம் |
|---|---|
| அங்கம் பொறுக்கி ஆத்தில் விடுதல் | இறந்தவரின் உடலை எரித்த சாம்பலை எடுத்து, சிறுசட்டியில் உறிபோலக் கட்டிவைத்து 16 நாள்கள் வைத்திருந்து பங்காளிகளோடு சேர்ந்து சென்று ஆற்றில் கரைத்துவிடுதல் |
| உப்புவாங்குதல் | நிச்சயதார்த்தம் |
| தொட்டிக்கட்டு வீடு | தானியங்களைக் கெடாமல் பாதுகாக்கப் பயன்படுத்தும் நிலவறை. தொட்டி என்பது தண்ணீர் தேங்கும் பகுதி. தொட்டியைப் போல வீட்டின் நடுவில் தொட்டி கட்டி அதன்மேல் கூரை வேய்ந்திருப்பர். அந்தத் தொட்டிக்குள் குழி இருக்கும். அதைச் சோளக்குழி என்பர். ஓராண்டில் விளையும் தானியங்களில் உணவுக்குப் போக, விதைப்பதற்கென தானியங்களை இந்தத் தொட்டிக்குள் வைத்துப் பாதுகாப்பார்கள். |
| பழைய சோத்து நேரம் | காலை சுமார் 10.00 மணிமுதல் 11.00 மணிக்குள்ளான நேரம் |
| பட்டியாள் நேரம் | இரவு 9.00 மணியிலிருந்து 10.00 மணிக்குள்ளான நேரம் |
| மத்தியான சோத்துக்குக் கையுடற நேரம் | நண்பகல் 2.00 மணியிலிருந்து 3.00 மணிக்குள்ளான நேரம் |

| | |
|---|---|
| ங்கோ | இது மனைவி கணவனிடம் பேசும்போது மதிப்பு, அன்பு, பணிவு போன்றவற்றைச் சுட்டுவதற்காகப் பயன்படுத்தும் சொல். |
| ஈடுதேங்காய் | நேர்த்திக்கடன் நிறைவேறியதற்கு ஈடாக உடைக்கும் சிதறுதேங்காய் |

முன்னதாக, ‘‘கொங்கு மண்டல வழக்குச் சொற்கள்‘‘ என்ற தலைப்பில் கருத்துரை வழங்கிய கோவை விவேகானந்தா மேலாண்மைக் கல்லூரியின் செயலாளர் மற்றும் தாளாளர் முனைவர் வே.குழந்தைசாமி அவர்கள், கொங்கு மண்டலத்தில் பல்வேறு வட்டாரங்களில், பல்வேறு குழுக்கள் மற்றும் இனத்தினரால் பேசப்படும் எண்ணற்ற வழக்குச் சொற்களைத் தொகுப்பது மட்டும் தமிழின் சொற்செறிவுக்கு ஊட்டமாக அமையும் என்று தான் கருதவில்லை. மாறாக அச்சொற்களைச் சலித்தெடுத்து அத்தகைய சிறப்பான சொற்கள் எவ்வாறு தமிழின் செஞ்சொற்களோடு தொடர்புடையவை என்று அவற்றின் வேரை ஆராய்ந்து தெளிந்தால் அது தமிழ்ச் சொல்வளம் மேலும் பெருக வழிவகுக்கும் என்றார். தமிழ் என்னும் வற்றாத பெரு நீரோட்டத்தில், அத்தகைய சொற்களைக் கலக்கவிட வேண்டும் என்று கூறியதோடு, கொங்கு மண்டல வழக்குச் சொற்களை வினைச்சொற்கள், உறவுமுறைச் சொற்கள், பெயர்ச்சொற்கள், உரிச்சொற்கள் என்ற வகையில் பகுத்து 60 சொற்களை விளக்கினார்.

**வினைச் சொற்கள்**

| | |
|---|---|
| திருப்பூட்டு | திருமண முகூர்த்தம் (திருமாங்கல்யம் அணிவித்தல்) |
| கண்டுமுதல் | கொள்முதல் என்ற சொல் பொருள் வாங்குவதைக் குறிப்பது போலே, விளைச்சலின் அளவை, மதிப்பைக் குறிக்கும் சொல். (Output என்ற ஆங்கிலச் சொல்லின் நேர் சொல்) |
| தொத்துதல் | தாவுதல் – கம்பராமாயணத்தில் காணப்படும் சொல். (மேகம் தொத்திய மலை முகடுகள்) (வண்டியில் இடம் இல்லாட்டியும் தொத்திக்கிட்டுப் போறான்.) |
| முடுக்கு | ஓட்டுதல் – விரட்டுதல் – முடுகு (கம்பராமாயணம்) (ஆட்டைக் காட்டுக்கு முடுக்கு) |
| பாணித்தல் | நிதானித்தல் – ஆராய்ந்து செயல் (கம்பராமாயணம்) (எதுக்கும் பாணித்துப் பார்த்துச் செய்) |
| பம்புதல் | நெருங்குதல் – (கம்பராமாயணம்) – கொங்கு வழக்கில் சற்றுப் பொருள் வேறுபடுகிறது – தயங்கி நெருங்குதல் (ஏண்டா பம்பிப் பம்பி வார ? (வருகிறாய்) |

**உறவைக் குறிக்கும் சொற்கள்**

| | |
|---|---|
| ஆத்தாள் | பாட்டி என்பதன் வட்டார வழக்கு – அம்மாவின் அம்மா அம்மாயி / அம்மச்சி – அப்பாவின் அம்மா / அப்பத்தா |
| அய்யன் | தாத்தா என்பதன் வட்டாரச்சொல் (சிலர் அப்பாவையும் இப்படி அழைப்பர்) அம்மாவின் அப்பா – அப்பச்சி அப்பாவின் அப்பா அப்பாரு (தமிழ்நாட்டின் வேறு சில பகுதிகளிலும் இச்சொற்களைக் காணலாம்) |
| ஒக்கலும் மக்களும் | உறவினர், பிள்ளைகள் (தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல் – திருக்குறள்) (ஒக்கலும் மக்களும் ஒண்ணாயிட்டாங்க) |
| தாயாதிகள் / தாயிதிகள் | ஒரு தாயின் வழித்தோன்றல்கள் / பங்காளிகள் (கோவை மற்றும் சுற்று வட்டார வழக்கு) |
| ஈத்து, பேத்து | ஈற்று, பேத்து என்பதன் திரிபு (ஈன்ற மக்களும் அவர்கள் பிள்ளைகளும்) |
| நங்கையாள் | அண்ணன் மனைவி (இரு பாலருக்கும்)<br>மனைவியின் அக்காள் (ஆண்களுக்கு) |

**பெயர்ச்சொற்கள் / உரிச்சொற்கள்**

| | |
|---|---|
| அய்யக்காரன் | பிச்சைக்காரன் என்பதன் பண்பட்ட சொல்லாட்சி (அய்யமிட்டு உண் – ஔவையார்) (பாட்டிமார் சொன்னது தற்போது மறைந்து விட்டது) |
| எகத்தாளம் | அகந்தை / அகந்தைப் பேச்சு |
| எளக்காரம் | எளப்பம் – தாழ்வாக மதித்தல் (இந்த வீட்டில் எல்லாருக்கும் நான் எளக்காரமாப் போயிட்டேன்) |
| ஓரவஞ்சனை | ஒருசார்புடைமை (ஓரவஞ்சனையாப் பேசறான்) |
| ஐயறவு | ஐயப்பாடு, சந்தேகம் என்பதன் தூய தமிழ் (கம்பராமாயணம்) (இன்னிக்குப் போறவேலை முடியுமாங்கறது ஐயறவா இருக்குது) |
| அத்துவானம் | தரத்தில் குறைந்தது |
| அங்கராக்கு | மேல் சட்டை (பிற மொழிச் சாயலுடையது)– முந்தைய தலைமுறைச் சொல் |
| ஏடாகூடம் | இடர்ப்பாடு (பஸ் கவுந்து ஏடாகூடமாகீட்டுது) |
| எசகுபிசகு | இயையாது, பிசகானது என்று பொருள் (ஊர்க்கூட்டத்தில் இன்னைக்கு எசுகுபிசகா கைகலப்பு ஆயிட்டுது) |
| அப்பை சொப்பை | அற்பம் சொற்பம் என்பதன் திரிபு, பலவீனம் (அப்பை சொப்பையா இருந்தா தூக்கி கனம் பாத்துருவானுக) |
| கல்மாரி | ஆலங்கட்டி மழை என்று இன்று அச்சு மற்றும் காட்சி ஊடகங்கள் குறிப்பிடுகின்றன. செஞ்சொல்–(திவ்யப்ரபந்தம்); கொங்கு மண்டலத்தில் பெரும் பகுதியில் இச்சொல்லே பயன்பாட்டில் உள்ளது. |
| கூதல் | குளிர் – செஞ்சொல் (கூதக்காத்து விசுவிசுன்னு அடிக்குது) |
| கச்சாடை | கோவணம் (ஆண்களுக்கு) தூய தமிழ் வடிவம்– கச்சு என்பது இருபாலருக்கும் பொதுவான சொல். பெண்களுக்கு மார்க்கச்சு (கச்சிருக்கும் போது கண்ணானேன், கைக்குழந்தை வச்சிருக்கும் போது வேம்பானேன்–தனிப்பாடல் திரட்டு) |
| பையப்பைய | மெள்ள, மெள்ள – படிப்படியாக (கம்பராமாயணம் பைப்பய) தற்கால எழுத்து வடிவில் |
| வளரி | கூடுதல் விளைச்சல் / Increment வரவு / பயன் என்பதன் நேர்சொல் (இந்த வருசம் பருத்தி மகசூல் எடை போடும் போது நல்ல வளரி வந்தது) |
| மாழாத | மிகையான / கெடாத – மாழ்குதல் என்பதன் எதிர்ச்சொல் (ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்கையை – குறள்) |

அமர்வில் பங்கேற்று ''மொழிபெயர்ப்பில் வழக்காற்றுச் சொற்கள்'' என்னும் பொருண்மையில் உரையாற்றிய உத்திரபிரதேசம் அலிகர் முசுலீம் பல்கலைக்கழக நவீன இந்திய மொழிகள்துறையின் தமிழ் உதவிப் பேராசிரியர் முனைவர் இரா.தமிழ்ச்செல்வன் அவர்கள், பன்மைத் தன்மை அமைப்பில் உள்ள இந்தியச் சூழலில் மொழிப் பாதுகாப்பில் கவனம் செலுத்துவது மிகுதியும் தேவையான ஒன்றாகும். இந்தியாவில் 19569 மொழிகள் பேசப்படுபவதாக 2011 கணக்கெடுப்பின் வழி அறிய முடிகிறது. இதில் பத்தாயிரம் பேருக்கும் மேல் பேசுவோர் எண்ணிக்கையில் உள்ள மொழிகள் பட்டியலில் 121 மொழிகள் உள்ளன. இவற்றில் பலவும் கிளைமொழிகளாக உள்ளன. இம்மொழிகள் காலப்போக்கில் அந்தந்த மொழிகளுடன் தொடர்புடைய ஆதிக்க மொழியுடன் ஒன்றிப்போய் அழிந்து போவதற்கான சூழல் உள்ளது. அம்மொழிகளுடன் வாழ்க்கை அனுபவ வெளிப்பாடுகளைத் தன்னுள் அடக்கியுள்ள ஏராளமான கலைச்சொற்களும் காணாமல் போய்விடுவதற்கான வாய்ப்புகள் உள்ளன. இந்த நிலையில் தான் அனைவரும் அவரவர் மொழியை வளப்படுத்த வேண்டிய தேவை இன்றைக்கு இன்றியமையாததாக இருக்கின்றது. மொழி வளமையில் வட்டார மொழிச் சொற்கள் முக்கியத் தரவுகளாக இருக்கின்றன. வட்டாரச் சொற்கள் மீது கவனம் செலுத்துவதென்பது மொழிக்கும் வாழ்வியலுக்கும் பலம் சேர்க்கக் கூடியதாகும். மேலும் ஒரு மொழியில் புதிய சொற்களை உருவாக்குவதற்கும் வட்டார மொழிச் சொற்களே பெரிதும் உறுதுணை புரியக்கூடியன. வட்டார வழக்குச் சொற்களே ஒவ்வொரு மொழி வளர்ச்சிக்கும் அரணாக விளங்குகின்றன என்று தெரிவித்தார்.

தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள், மாணவர்கள் உள்பட நூற்றுக்கும் மேற்பட்டோர் பங்கேற்ற இணையவழிப் பன்னாட்டு உரை அரங்கத்தினைச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் தொகுப்பாளர் திருமதி.ஜெ.சாந்தி ஒருங்கிணைக்க, இலயோலா கல்லூரித் தமிழ்த்துறைப் பேராசிரியர் சந்தியாகப்பர் நன்றியுரை கூறினார்.

# தில்லியைக் குணமாக்கும் தமிழ் மருத்துவம்



மரு.க. இளவரசன்.M.D(S)., சித்த மருத்துவ ஆலோசகர், சித்த மருத்துவ புற நோயாளிகள் பிரிவு, ஆயுஷ் வெள்னஸ் கிளினிக், மத்திய சித்த மருத்துவ ஆராய்ச்சி மைய்யம் (CCRS), இந்திய அரசு ஆயுஸ் அமைச்சகம், குடியரசு தலைவர் தோட்டம், குடியரசு தலைவர் இருப்பிடம் மற்றும் அலுவலக அமைச்சகம், புதுடெல்லி.

கண்ணுக்குப் புலனாகாமல் அண்டத்தில் வாழும் மக்களின் எண்ணங்களிலெல்லாம் இறப்பு என்னும் பேரச்சத்தை விதைத்துள்ள கொரோனாவை நோய் எதிர்ப்பாற்றலால் வெல்வதற்குத் துணைசெய்யும் வகையில் தில்லியில் தொண்டுள்ளத்துடன் மக்களுக்குச் சித்த மருந்தான சளிக்காய்ச்சல் நீக்கக் குடிநீரை (கபசுரக் குடிநீர்) இலவயமாக வழங்கி வருகிறார் இளம் சித்த மருத்துவர் க.இளவரசன்.

தமிழ்மண் சார்ந்த மரபு மருத்துவ முறையான சித்த மருத்துவத்தின் மீது பேரன்பும் பெரும் ஈடுபாடும் கொண்ட இவர் வர்ம மருத்துவத்தில் தேர்ந்த பட்டறிவுள்ளவர், இவர் சென்னை தேசிய சித்த மருத்துவ நிறுவனத்தில் (NIS) சித்த மருத்துவ குழந்தை மருத்துவப் பிரிவில் முதுகலை பயின்றவராவார். தன்னிடம் மருத்துவத்திற்கு வரும் 'சிறப்புக் குழந்தைகளுக்கு' "Special Child" வர்ம மருத்துவத்துடன் இணைந்த புற மருத்துவம் செய்து சிறப்புக் குழந்தைகளின் உடல் மற்றும் உள்ள நலன் முன்னேற்றம் கண்டு மகிழ்ச்சி அடையும் மழலை உள்ளம் கொண்ட மருத்துவர்.

இப்போது நாட்டின் தலைநகரான புதுதில்லியில் மத்திய சித்த மருத்துவ ஆராய்ச்சி மைய பிரிவில் – Central council for Reserach in Siddha, இந்திய அரசு ஆயூஸ் அமைச்சகம் – Ministry of AYUSH,Govt of india. குடியரசு தலைவர் இருப்பிடம் தோட்டம் – President Estate, Rastrapati bhawan இல் புற நோயாளர் பிரிவில் சித்த மருத்துவ ஆலோசகராகப் பணியாற்றி வரும் மரு.இளவரசன் சித்த மருத்துவத்தை நாட்டின் வடகோடியில் பரவலாக்க வேண்டும் என்ற முயற்சியில் முழுமனத்துடன் மும்முரமாக ஈடுபட்டுவருகிறார்.

சித்த மருந்தான சளிக்காய்ச்சல் நீக்கக் குடிநீரைத் (கபசுரக் குடிநீர்) தில்லியில் உள்ள தமிழர் வாழும் பகுதிகள் மற்றும் சில பகுதிகளில் தனியாளாகச் சென்று வழங்கி, தொடர் நேரடி விளக்கம், அது குறித்தான தகவல் அனுப்புதல் மற்றும் சித்த மருத்துவம் குறித்துப் பரப்புரையும் செய்து வருகிறார். கொரோனாவின் கொடுமையால் ஊரடங்கு என்னும் பெயரில் பாரடங்கி கிடக்கும் வேளையிலும் ஊண் உறக்கமின்றி ஒப்பறியாமல் தேச மக்களின் நலனில் மாறாத பற்றுக் கொண்டு அயராது உழைக்கும் இளவரசன் போன்ற மருத்துவர்களின் தூய தொண்டைப் போற்றி ஊக்கப்படுத்துவோம்.



# தூயதமிழ் பேசினால் இலவயம்!




தாய்மையின் வலியையும் வலிமையையும் உணர்ந்திருப்பதால்தான் இன்றும்கூட தானிஓட்டுநர்கள் பலர் தங்கள் தானியில் "பிரசவத்திற்கு இலவசம்" என்று எழுதியிருப்பதைக் காணமுடிகிறது.

அதேபோல் தாய்த்தமிழே தமிழரின் அடையாளம் என்பதையும் கலப்பின்றிப் பேசுவதே மொழிக்கு நாம் செய்யும் தொண்டு என்பதையும் தானும் உணர்ந்தும் பிறருக்கும் உணர்த்தும் வகையில், சூலூரில் ஒருவர் தூயதமிழில் பேசுவோர்க்கு இலவயமாகக் கணிப்பொறி பழுது நீக்கித் தருகிறார்.

கோவை மாவட்டம் சூலூரைச் சேர்ந்த சூ.மா. நடராசன் கணிப்பொறி பழுதுநீக்கும் பணியோடு, நாற்படை விளையாட்டிற்குப் (சதுரங்கம்) பயிற்சியும் அளித்துவருகிறார். இவர் தூயதமிழ் பேசுவோரிடம் கணினி பழுது நீக்க பணம் பெறாமல் இலவயமாகச் செய்துதருகிறார்.

நடராசனிடம், "தூய தமிழின் மீதான ஆர்வம் ஏற்பட என்ன காரணம் ?" என்று கேட்டபோது, அவர், "உடனடி தேவைக்குப் பணம் கடனாக வாங்கலாம். ஆனால் நம் தாய்மொழியில் சொல்வளம் நிறைந்திருக்க நாம் பேசுவதற்குப் பிறமொழியினை ஏன் கடனாக வாங்க வேண்டும் என்ற எண்ணமே தூயதமிழ் மீதான ஆர்வத்திற்கு அடிப்படை" என்று கூறினார்.

"பழுது நீக்க இலவயம் என்றது ஏன் ?" எனக் கேட்டபோது, "நாம் மட்டும் தூயதமிழில் பேசினால் போதாது. நம்மால் முடிந்தவரை இங்குப் படிக்கவரும், பணிபுரிய வரும் சிலரையாவது தூயதமிழிலேயே பேச வைக்க முயற்சி எடுக்க வேண்டும் என்று தோன்றியது. ஆனால் நம் ஊரில் தமிழில் பேசினால் என்ன கிடைக்கும் ? என்பவர்கள்தானே அதிகம். அதனால்தான் தூயதமிழில் பேசினால் கணிப்பொறி பழுது நீக்கம் இலவசம் எனச் சொல்லத் தூண்டியது" என்று கூறினார்.

போற்றும்புகழ் தமிழிலேயே உரையாற்ற வேண்டும், இங்கு அந்த மாற்றம் வேண்டும் என்று விரும்பி, தானும் அந்த மாற்றம் ஏற்று, ஊற்றெடுத்த ஆக்கமான மாற்றத்தை மற்றவரிடத்தும் மடைமாற்றம் செய்து, பைந்தமிழன்பர்களுக்குப் பணமின்றி ஊழியம் செய்யும் நடராசன் போன்ற தூயதமிழ்த் தொண்டர்களை நற்றமிழால் போற்றுவோம் நாளும்.

# அறிவிப்பு மடல்
# அகராதி ஆய்வு மலர் 2020-க்குக் கட்டுரைகள் வரவேற்கப்படுகின்றன

தமிழ்ப்புலமையோரே!

தமிழ் அகராதியியல் அமைப்பு முறைக்கு முன்னோடியாக விளங்கிய வீரமாமுனிவரின் தமிழ்த்தொண்டைப் போற்றும் வகையில் ஆண்டுதோறும் அவரது பிறந்தநாளான நவம்பர் 08ஆம் நாள் "தமிழ் அகராதியியல் நாள் விழா'' வாகக் கொண்டாடப்படும் என்றும் அதனையொட்டி நவம்பர் 08, 09 ஆம் நாள்களில் பன்னாட்டுக் கருத்தரங்கம் நடத்தப்படும் என்றும் தமிழ்நாடு அரசு அறிவித்துள்ளது.

அதன்படி இந்த ஆண்டும் பன்னாட்டுக் கருத்தரங்கம் நடத்தப்பெற்று, விழாவின் போது அகராதியியல் சிறப்பு ஆய்வுமலர் வெளியிடப் பெறவுள்ளது. அந்த ஆய்வுமலருக்கென்று அகராதி யியல் வல்லுநர்கள், மொழியியலறிஞர்கள், சொல் லாக்கத் திறவோர், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள், தமிழார்வலர்கள் உள்ளிட்டோரிடமிருந்து கருத்துச் செறிவார்ந்த கட்டுரைகள் வரவேற்கப்படுகின்றன.

**பொருண்மைகள்**

1. மொழிக்காப்பும் வட்டார வழக்கும்
2. சொல்லாக்கமும் வட்டார வழக்கும்
3. மொழிபெயர்ப்பும் கலைச்சொல்லாக்கமும்
4. சொல்லாக்க நெறிமுறைகள்
5. பிறமொழிகளில் தமிழ்ச்சொற்கள்
6. மொழிக்காப்பில் அகராதிகளின் பங்களிப்பு
7. ஒப்பாய்வு நோக்கில் தமிழும் திராவிட மொழிகளும்
8. சொற்பிறப்பியல் அகராதிகள் – காலத்தின் தேவை
9. பழந்தமிழ் இலக்கியங்களில் வட்டார வழக்குச் சொற்கள்
10. இக்காலப் படைப்புகளில் வட்டார வழக்குச் சொற்கள்
11. திரையிசைப் பாடல்களில் வட்டார வழக்குச் சொற்கள்
12. தமிழ்மொழி கற்றலில் அகராதிகளின் பங்கு
13. அகராதிப் பணிகளில் தமிழமைப்புகளின் பங்களிப்பு
14. மருத்துவக் கலைச்சொல்லாக்கம்
15. கணினிக் கலைச்சொல்லாக்கம்
16. தூயதமிழ் பேசுவதில் இளைஞர்கள் எதிர்கொள்ளும் சிக்கல்களும் தீர்வுகளும்
17. சொற்கள் உணர்த்தும் தமிழர் பண்பாடும் வரலாறும்
18. தமிழ்மொழிக் காப்பில் தூயதமிழ்ப் பெயர்களின் பங்களிப்பு
19. மொழிக்காப்பில் புலம்பெயர் தமிழர்களின் பங்களிப்பு

**கட்டுரை அமைவு விவரம்**

| | | |
|---|---|---|
| பக்கங்கள் | – | ஏ4 அளவில் 5 பக்கங்களுக்கு மிகாமல் |
| எழுத்துரு | – | ஒருங்குகுறி (யுனிகோட்) |
| எழுத்தளவு | – | 11 |
| வரி இடைவெளி | – | 1.5 |
| அனுப்பவேண்டிய மின்னஞ்சல் முகவரி | – | agarathimalar2020@gmail.com |
| கட்டுரை வந்து சேரவேண்டிய கடைசி நாள் | – | 15.08.2020 |

**குறிப்பு**

- கட்டுரைகளைத் தட்டச்சு செய்து மேற்குறித்த மின்னஞ்சல் முகவரியில் மட்டுமே அனுப்ப வேண்டும்.
- கட்டுரைகள் துணை நூற்பட்டியலுடன் அமைய வேண்டும்.
- கட்டுரையாளர்கள் ஒருபக்க அளவிலான தன் விவரக் குறிப்பை ( Biodata) அனுப்ப வேண்டும்.
- கட்டுரையை இதற்குமுன் வேறெந்த கருத்தரங்கத்திற்கும் இதழுக்கும் வழங்கவில்லை என்று தற்சான்றொப்பமிட்டு (Self Attested) அனுப்ப வேண்டும்.
- தேர்வுக்குழுவினரால் தெரிவுசெய்யப்படும் கட்டுரைகள் மட்டுமே ஆய்வு மலரில் இடம்பெறும்.
- கட்டுரைகளைச் சுருக்கவும், நீக்கவும் தேர்வுக் குழுவினருக்கு முழு அதிகாரம் உண்டு.

# அருந்தமிழைக் காப்பாற்றும் அகராதிகள்!

**அ**கரம் + ஆதி = அகராதி. அகரம் என்பது அ என்ற எழுத்தையும், ஆதி என்பது முதல் என்ற பொருளையும் குறிக்கும். எனவே தமிழில் அ என்னும் எழுத்தை முதலாகக் கொண்டு சொற்களை வரிசைப்படுத்திப் பொருள் சொல்லும் நூல் அகராதி என்று அழைக்கப்படுகின்றது. அகராதியானது அகரமுதலி, அகரவரிசை என்ற வேறுபெயர்களாலும் அழைக்கப்படுகின்றது. சொற்களின் சொல்லாழம் சொல்லும் அகராதி என்பது காலத்தின் தேவை என்பதனை விளக்குவதாக இக்கட்டுரை அமைகிறது.

### நிகண்டுகளும் அகராதிகளும்

ஒருமொழியில் உள்ள சொற்களுக்குப் பொருள் தெரிந்துகொள்ள வேண்டிய தேவை எல்லாக் காலங்களிலும் உண்டு. அதனால்தான், தமிழில் கிடைத்துள்ள, மூவாயிரம் ஆண்டுகளுக்கும் முற்பட்ட தொல்காப்பியத்திலேயே அகராதிக் கூறுகள் அமைந்திருப்பதை நாம் அறிய முடிகிறது. சொல்லதிகாரத்தின் உரியியலில் 120 சொற்களுக்கும், இடையியலில் சில சொற்களுக்கும், பொருளதிகாரத்தின் மரபியலில் சில சொற்களுக்கும் பொருள் விளக்கம் தரப்பட்டுள்ளன.




தொல்காப்பியம் என்னும் தொடக்கப்புள்ளியைத் தொடர்ந்து சொல்லுக்குப் பொருள் சொல்ல செய்யுள் வடிவிலான நிகண்டுகள் படைக்கப்பட்டன. சேந்தன் திவாகரம் எனப்படும் திவாகர நிகண்டு, பிங்கல நிகண்டு, சூடாமணி நிகண்டு, கயாதர நிகண்டு, உரிச்சொல் நிகண்டு முதலிய பல நிகண்டுகள் உருவாக்கப்பட்டன. செய்யுள் வடிவிலான நிகண்டுகள் மனப்பாடம் செய்துகொள்ளும் வகையில் அமைந்திருந்தன. அக்காலத்தில் நிகண்டுகளை முழுமையாகக் கற்றவர்களே பெரும்பண்டிதர்களாக மதிக்கப்பட்டனர். இதனை, "நிகண்டு கல்லாதவன் மண்டு" என்ற பழமொழியினால் அறியலாம்.

### அகராதி – பெயர் அறிமுகம்

நிகண்டுகள் செய்யுள் வடிவில் பொருள் சொல்லிவந்த நிலையில் சொற்களை அகரவரிசையில் அமைத்துப் பொருள் சொல்லும் வகையில் 1594 ஆம் ஆண்டு சிதம்பர இரேவண சித்தர் அகராதி நிகண்டை இயற்றினார். இவரே அகராதி என்ற பெயரையும் அறிமுகப்படுத்தியுள்ளார்.

### அயல்நாட்டினரின் அகராதிக்கொடை

நம் நாட்டிற்கு மதம் பரப்ப வந்த ஐரோப்பியப் பாதிரிமார்கள் மொழி புரிதல், கருத்துப் பரிமாற்றம் ஆகிய தேவைகளைக் கருத்தில்கொண்டு பன்மொழி அகராதிகளைப் படைத்தனர். அந்த அகராதிகள் அவர்கள் நம்மொழியைப் புரிந்துகொள்ளவும், நாம் அவர்கள் மொழியைப் புரிந்துகொள்ளவும் பயன்பட்டன; பயன்படுகின்றன.

1679இல் ஆந்தம் தெ ப்ரோயன்சா என்பவர் தமிழ் – போர்ச்சுக்கீசிய அகராதியை இயற்றினார். ஃபாபிரிசியஸ் தமிழ் – ஆங்கில அகராதியையும், இராட்லர் தமிழ்– ஆங்கில அகராதியையும், வின்சுலோ ஆங்கிலம் – தமிழ், தமிழ்–ஆங்கில அகராதிகளையும் இயற்றினார்கள். பிற்காலத்தில் தமிழ்ச் சொல்லுக்கு ஆங்கிலச் சொல்லாலும் ஆங்கிலச் சொல்லுக்குத் தமிழ்ச் சொல்லாலும் பொருள் சொல்லும் அகராதிகள் பல படைக்கப்பட்டதற்கு மேற்கூறிய அகராதிகளே அடிப்படையாக அமைந்தன.

இத்தாலி நாட்டைச் சார்ந்த கான்ஸ்டன்டைன் ஜோசப்










பெஸ்கி என்னும் இயற்பெரைக் கொண்ட வீரமாமுனிவர் 1732 இல் பெயர், பொருள், தொடை, தொகை என்னும் நான்கு பிரிவுகளை உள்ளடக்கிய சதுரகராதியை இயற்றினார். இந்த அகராதிதான் தற்போதுள்ளவாறு அகரவரிசையில் தமிழ்ச் சொல்லுக்குத் தமிழ்ச் சொல்லாலேயே பொருள் கூறும் அகராதிகள் தோன்றுவதற்கு அடிப்படையாக அமைந்தது. அதன் காரணமாகத்தான் வீரமாமுனிவர் தமிழ் அகராதியியலின் தந்தை என்று போற்றப்படுகின்றார்.

**அகராதியின் தேவை**

அகராதி என்பது சொல்லுக்குப் பொருள் சொல்லும் நூல். தேவையான நேரங்களில் மட்டும் அதனை எடுத்துப் பொருள் தெரிந்துகொண்டால் போதும் என்ற தவறான எண்ணம் இன்று நம்மிடையே பலருக்கும் இருக்கின்றது. சொற்கள் இல்லாமல் மொழி இல்லை. எனவே மொழியைக் காக்க வேண்டும் என்றால் சொற்களைக் காக்க வேண்டும். அதற்கு அகராதிகள் தேவை.

தமிழ் நம் தாய்மொழி. அப்படியிருக்க தமிழ்–தமிழ் அகராதிகள் எதற்குத் தேவை என்பது பலரும் கேட்கும் கேள்வி. தமிழ் ஓலைச்சுவடிக் காலம் தொடங்கி கணினிக்காலம் வரையிலான நீண்ட வரலாற்றைக் கொண்ட மொழி. சொல்வளம் நிறைந்த மொழி. எனவே தமிழின் சொல்வளத்தையும் பொருள் ஆழத்தையும் அறிந்துகொள்ள தமிழ் அகராதிகள் தேவை.

சான்றாக, சொல்லுதலின் வகையைக் குறிக்க தமிழில் ஏறத்தாழ நாற்பது சொற்கள் உள்ளன. அவை

| சொல் | சிறப்புப் பொருள் |
|---|---|
| 1. அசைத்தல் | அசையழுத்தத்துடன் சொல்லுதல். அசையழுத்தம் (accent) |
| 2. அறைதல் | அடித்து (வன்மையாய் மறுத்து)ச் சொல்லுதல் |
| 3. இசைத்தல் | ஓசை வேறுபாட்டுடன் சொல்லுதல் |
| 4. இயம்புதல் | இசைக்கருவி இயக்கிச் சொல்லுதல் |
| 5. உரைத்தல் | அருஞ்சொற்களுக்கு அல்லது செய்யுள்களுக்குப் பொருள் சொல்லுதல் |
| 6. உளறுதல் | ஒன்றிருக்க ஒன்றைச் சொல்லுதல் |
| 7. என்னுதல் | என்று சொல்லுதல் |
| 8. ஓதுதல் | காதிற்குள் மெல்லச் சொல்லுதல் |
| 9. கத்துதல் | குரலெழுப்பிச் சொல்லுதல் |
| 10. கரைதல் | அழைத்துச் சொல்லுதல் |

| | |
|---|---|
| 11. கழறுதல் | கடிந்து சொல்லுதல் |
| 12. கிளத்தல் | இன்னதென்று குறிப்பிட்டுச் சொல்லுதல் |
| 13. கிளத்துதல் | குடும்ப வரலாறு சொல்லுதல் |
| 14. குயிலுதல், குயிற்றுதல் | குயில்போல் இன்குரலிற் சொல்லுதல் |
| 15. குழறுதல் | நாத் தளர்ந்து சொல்லுதல் |
| 16. கூறுதல் | கூறுபடுத்திச் சொல்லுதல் |
| 17. சாற்றுதல் | பலரறியச் சொல்லுதல் |
| 18. செப்புதல் | வினாவிற்கு விடை சொல்லுதல் |
| 19. நவிலுதல் | நாவினால் ஒலித்துப் பயிலுதல் |
| 20. நுதலுதல் | ஒன்றைச் சொல்லித் தொடங்குதல் |
| 21. நுவலுதல் | நூலின் நுண்பொருள் சொல்லுதல் |
| 22. நொடித்தல் | கதை சொல்லுதல் |
| 23. பகர்தல் | பண்டங்களைப் பகுத்து விலை சொல்லுதல் |
| 24. பறைதல் | மறை (இரகசியம்) வெளிப்படுத்திச் சொல்லுதல் |
| 25. பன்னுதல் | நிறுத்தி நிறுத்திச் சொல்லுதல் |
| 26. பனுவுதல் | செய்யுளில் புகழ்ந்து சொல்லுதல் |
| 27. புகலுதல் | விரும்பிச் சொல்லுதல் |
| 28. புலம்புதல் | தனக்குத்தானே சொல்லுதல் |
| 29. பேசுதல் | ஒருமொழியிற் சொல்லுதல் |
| 30. பொழிதல் | இடைவிடாது சொல்லுதல் |
| 31. மாறுதல் | உரையாட்டில் மாறிச் சொல்லுதல் |
| 32. மிழற்றுதல் | மழலைபோல் இனிமையாகச் சொல்லுதல் |
| 33. மொழிதல் | சொற்களைத் தெளிவாகப் பலுக்கிச் சொல்லுதல் |
| 34. வலத்தல் | கேட்பார் மனத்தைப் பிணிக்கச் சொல்லுதல் |
| 35. விடுதல் | மெல்ல வெளிவிட்டுச் சொல்லுதல் |
| 36. விதத்தல் | சிறப்பாய் எடுத்துச் சொல்லுதல் |
| 37. விள்ளுதல் | வெளிவிட்டுச் சொல்லுதல் |
| 38. விளத்துதல் | (விவரித்துச்) சொல்லுதல் |
| 39. விளம்புதல் | ஓர் அறிவிப்பைச் சொல்லுதல் |

சொல்வளம் மிக்க தமிழ்மொழியில் ஒரு சொல்லுக்குப் பலபொருள்கள் உண்டு. அவற்றை அறிந்து சுவைத்து மகிழவும் அகராதிகள் தேவை.

சான்றாக,

குதிரைக்கனியைநாகம்பறித்துக்கொண்டோடயிலே
குதிரை வரக்கண்டு நாகத்தி லேறிடக் கூடவந்த
குதிரை யமட்டிட நாகம் பயந்துபின் கூப்பிட்டதால்
குதிரை பறந்து தடாகத்தி லானையைக் குத்தியதே''

என்ற தனிப்பாடலைக் காணலாம். இதன் பொருள் மாம்பழத்தைக் குரங்கு பறித்துக் கொண்டு ஓடும்போது செந்நாய் அதைப் பிடுங்க வருவதைக் கண்டு புன்னை மரத்தின்மேல் குரங்கு ஏறிட, பிடிக்க வந்த செந்நாய் அச்சக் குரல் எழுப்ப, குரங்கு அஞ்சிக் கதறவே, மரத்திலிருந்து

கொக்கானது பறந்துபோய் பொய்கையிலுள்ள களிற்று மீனைக் கொத்தியது என்பதாகும். இப்பாடலில்,

குதிரைக் கனி – மாம்பழம்

நாகம் – குரங்கு

குதிரை – செந்நாய்

நாகம் – புன்னைமரம்

நாகம் – குரங்கு

குதிரை – கொக்கு

ஆனை – களிற்றுமீன்

என்ற பொருள்கள் இருப்பதை அறிந்து சுவைத்து மகிழ நமக்கு அகராதியின் துணை தேவைப்படுகின்றது. இதனால் பழந்தமிழ் இலக்கியங்களைப் படிப்பதில் ஆர்வம் மிகும்.

சொற்களின் பொருள் மாற்றத்தை அறிந்து கொள்ளவும் அகராதிகள் தேவை. சான்றாக, சங்க இலக்கியங்களில் நாற்றம் என்ற சொல் 'நறுமணம்' என்ற பொருளிலேயே வழங்கப்பட்டுள்ளது. ஆனால் இன்று அச்சொல் 'தீமணம்' என்ற பொருளில் மட்டுமே சொல்லப்பட்டுவருகிறது. இதுபோன்ற சொல்பொருள் மாற்றங்களை உணர அகராதிகள் தேவை.

**முடிவுரை**

சொற்களைப் பாதுகாக்க, அதன்மூலம் மொழியைப் பாதுகாக்க, தமிழின் சொல்வளம் அறிய, மொழியின் சொல்லாழம் சொல்ல, சொற்களின் பொருள் மாற்றத்தைப் புரிந்துகொள்ள, மொழியின் தொன்மையை உணர்த்த, அகராதிகள் காலந்தோறும் படைக்கப்பட வேண்டியது கட்டாயமாகும்.

**உதவிய நூல்கள்**


1. தமிழ் அகராதிக்கலை, சுந்தர சண்முகனார்
2. பண்டைய தமிழ நாகரிகமும் பண்பாடும், ஞா.தேவநேயப் பாவாணர்
3. தனிப்பாடல் திரட்டு (இரண்டாம் தொகுதி)



**செ.ரா.சதீஷ்குமார்**
முதுகலைத் தமிழாசிரியர்
அரசு ஆண்கள் மேல்நிலைப்பள்ளி
காரியாபட்டி
விருதுநகர் மாவட்டம்